ப்ரபலமானமுதலையின்கையிலே யகப்பட்டு அநந்யகதியாய்நின்ற கஜேந்த்ராழ்வானை ரக்ஷைபண்ணி. அதில்நின்றும் விடுவித்து ரக்ஷிக்கையாலும், (உசிதவிஷயே ஸந்நிதாநாத்) யாவரும்வந்துவணங்கும் பொழில்திருவாறன்விளையதனை - * அயர்வறுமமரர்களும் வந்தாஶ்ரயிக்கும்படி யதிஶ்லாக்யமான (திருவாறன்விளையிலேயெழுந்தருளியிருக்கையாலும்; ( ஶுசித்வாத் ) திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்றபின்னே - தன்னிடத்திலே ப்ரவணரானால் இதரவிஷய நிஸ்ப்ருஹமாம்படி பண்ணவல்ல பரிசுத்தனுகையாலும், திருவாறன்விளை யெம்பெருமான், தன்னை ஸ்தோத்ரம்பண்ணுகிற பேர்களுடைய து:கத்தையெல்லாம் சமிப்பியாநிற்கிறுனென்று "இன்பம்பயக்க" என்கிற தஶகத்திலே யாழ்வாராலே யறுதியிடப்பட்டதென்கிறுர். அ0

இப்படி ஸப்தமஶதகத்தில், பத்து தஶகங்களாலும் ப்ரதிபாதிதங்களான வர்த்தங்களை ஸங்க்ரஹித்தருளுகிறுர்.

ஶாட்யாஶங்காஸஹிஷ்ணும் ஶ்ரிதஜநதாகர்ஹணம் வ்யஷ்டரக்ஷம் ஸ்வரக்ஷா கர்த்ருத்வம் ஸ்வரக்ஷா க்ரமவிஜநநஸ்நேஹிதாம் ஸர்வஜ்ஞஸௌஹ்ருதம் ததா । ஸ்வீயாக்ரந்தஹ்ருதித்வம் ஸ்மரணஸரஸவிஶதம் விஸ்மயாஸ்பதிஸம்பத் ஸ்தோத்ரே யோஜ்யத்வம் ஸ்தோத்ருக்லேஶாபஹம் ஸப்தமே ஶதகே நிஷ்டேவோர்ஹ॥ (௭௧)

சாட்யாசங்கையை சஹிக்குமவனுய், ஆஶ்ரிதருடைய கர்ஹையை சமிப்பிக்குமவனுய், தன்னுடைய ரக்ஷகத்வத்தை வெளியிடுமவனுய், அதினுடைய ப்ரகாரங்களை ப்ரகாஶிப்பிக்குமவனுய், தன்னுடைய சர்வஜ்ஞ சௌஹார்த்தத்தை தர்ஶிப்பிக்குமவனுய், ஸ்வாஶ்ரிதருடைய கூப்பீட்டைப் பரிஹரிக்குமவனுய், அவர்களுக்கு விஶதமாக ஸ்ம்ருதிவிஷயனுமாய், ஆஶ்சர்யவிபூதிகனுமாய், ஆஶ்ரிதனை ஸ்வவிஷயஸ்தோத்ரத்திலே யோஜிக்குமவனுய், ஸ்தோதாக்களுடைய து:கத்தை ஹரிக்குமவனுன வெம்பெருமானை, சப்தமசதகத்திலே ஆஶ்ரிதாநிஷ்ட நிவர்த்தகனுக வாழ்வாரருளிச்செய்தாரென்கிறுர்.......... .. .................. ........ ........ ........... (௭௧)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

இன்பக்கவிபாடுவித்தோனையிந்திரையோ
டன்புற்றுவாழ்திருவாறன்விளையிற் - றுன்பமறக்
கண்டடிமைசெய்யக்கருதியமாறன்கழலே
திண்டிறலோர்யாவர்க்குந்தேவு. (௭0)

(இன்பக்கவி) இதில் - திருவாய்மொழிபாடி யடிமைசெய்யப்பாரித்த இவ்வருத்தியை யநுவதித்தருளிச்செய்கிறுர். எங்ஙனேயென்னில், தாம்பாடின திருவாய்மொழிகேட்கைக்காகப் பெரியபிராட்டியாருடனே பேரோலக்கமாகத் திருவாறன்விளையிலே யவன்வந்தெழுந்தருளியிருக்கிறபடியை யநுசந்தித்து, "நாமங்கேசென்று ''திருமால்வன்கவி' என்றவாயோலைப்படியே' அவனுமவளுமான சேர்த்தியிலே திருவாய்மொழியை யவர்களிருவருமுகந்து திருச்செவிசாத்தும்படிகேட்பித் தடிமைசெய்யப்பெறுவதெப்போதோ?" என்று மநோரதிக்கிற * இன்பம்பயக்கவிலர்த்தத்தை, "இன்பக்கவிபாடுவித்தோன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

(இன்பக்கவிபாடுவித்தோனை) "இன்கவிபாடியஞ்சனை," "ஒரு கவியென்பித்து," "என் நாமுதல்வந்து புகுந்துநல்லின்கவி," "திருந்துநலலின்கவி," "வண்டமிழ்க்கவி," "சீர்பெறவின்கவி," "உறப்பலவின்கவி," "பதவியவின்கவியாடியவப்பன்" என்று நிரதிசயபோக்யமான திருவாய்மொழியை யென்னைக்கொண்டு பாடுவித்த வுபகாரகனை. (இந்திரையோடன்புற்றுவாழ் திருவாறன்விளையில்) பெரியபிராட்டியாரோடேகூட, "திருவாய்மொழிகேட்கைக்குப் பாங்கானவிடம்" என்று ஆதரத்தைப்பண்ணிவாழ்ந்து கொடுபோருகிற திருவாறன்விளையில். அன்றிக்கே, இந்திரையோடன்புற்றென்று - பெரியபிராட்டியாரிடத்திலே ஸங்க்தனென்றுமாம். இத்தால் - "இன்பம்பயக்க" என்கிறமுதற்பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்தபடி. "ராமஸ்ய ஸீதயா ஸார்த்தம்," (ராமஸ்தஸீதயாஸார்த்தம்) * ராமஸ்ஸீதாமநுப்ராப்யராஜ்யம்புநரவாப்தவாந் । ப்ரஹ்ருஷ்டமுதிதோலோகஃ இறே. (திருவாறன்விளையில் துன்பமறக்கண்டு) * ஏழையராவியில்துஃகமெல்லாம்தீரக்கண்டு. (அடிமைசெய்யக்கருதிய) கண்டால்செய்யும்கார்யமான கைங்கர்யம்செய்கையிலேமநோரதிக்கிற. அதாவது-"அன்புற்றமர்ந்துவலஞ்செய்து கைதொழுநாள்களுமாகுங்கொலோ," "மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொலோ," "நீடுபொழில்திருவாறன்விளைதொழவாய்க்குங்கொல்நிச்சலுமே," "வடமதுரைப்பிறந்தவாய்க்குமணிநிறக்கண்ணபிரான்றன்மலரடிப்போதுகள்-எப்பொழுதும்மனத்தீங்குநினைக்கப்பெற-வாய்க்குங்கொல்நிச்சலுமே," "மகிட்டிருவாறனவிளையுலகமலிபுகழ்பாட," "திருவாறன்விளையென்னும்நீணகர்மதுவே," "வாணனையாயிரந்தோள் துணித்தான்சரணன்றிமற்றொன்றிலமே," "திருவாறன்விளையொன்றிவலஞ்செய்ய," "திருவாறன்விளையதனைமேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்னுமென்சிந்தனையே," "திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்றபின் - சிந்தைமற்றொன்றின்றிறத்ததல்லாத்தன்மை" என்றிப்படியாயிற திவர்க்கவ்விஷயத்தில் கைங்கர்யமநோரதம் நடந்தபடியென்கை. "உபகாரஸ்ம்ருதியோடே தன்சரிதை கேள்வியாகாமல் * இன்பம்பயக்கவிருந்த நிலத்தேவர்குழுவிலே பாட்டுக்கேட்பிப்பதாக காங்கோஷ்டியையும் தேவபிரானறியமறந்தவர்" என்றிறே ஆசார்ய ஹ்ருதயத்திலுமருளிச்செய்தது. (கண்டடிமைசெய்யக்கருதியமாறன்கழலே திண்டிறலோர்யாவர்க்குந்தேவு) தர்ஸநாநுபவ கைங்கர்ய மநோரதத்தையுடைய வாழ்வார்திருவடிகளே,தருடாத்யவஸாய யுக்தராயுள்ளார்க்கெல்லாம் பரதேவதை. ஆழ்வாரும்வேண்டா, நமக்குத்தேஸ்ய மாழ்வார்திருவடிகளே யமையும். அன்றிக்கே, மாறன்கழல்சேர் திண்டிறலோருண்டு - த்ருடாத்யவஸாயயுக்தரான மதுரகவி, நாதமுநி ப்ரப்ருதிகளாயுள்ளவர்கள். அத்யவஸாயதூர்ப்பலராயுள்ளாரெல்லார்க்கும் குலதைவமென்றுமாம் .. . ... . ... . ..... .... ...... .......... ... ...... . ...... ..(௭௦)

ஏழாம்பத்தில் பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௭௦.—பாட்டு - ௭௭௨.

## ஏழாம்பத்து முற்றிற்று.